# இயலிசை


தனி பிரதி விலை 0-50 காசுகள்
ஆண்டு சந்தா ரூ. 10-
அரையாண்டு சந்தா ரூ 5-

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S மீனாட்சிசுந்தரம்
துணை ஆசிரியர் :
K. P இளங்கோவன்

' இயலிசை '
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம், சென்னை 24

மலர் 3 | 1-6-94 | இயலிசைக்கலை தமிழ் மாதமிருமுறை | வைகாசி இதழ் | இதழ் 2-4


## மணிவிழா காணும் மன்னவனின் வெற்றிப் புன்னகை வாழ்க!



## மதுரை தமிழ் இசைச்சங்க இசை விழா

மதுரை மாநகரில் தமிழிசை பரப்பி வரும் தமிழ் இசைச் சங்கத்தின் 10 வது ஆண்டு இசை விழா மே 4 முதல் 10 வரை மதுரை ராஜா முத்தையா மன்றத்தில் நடைபெற்றது. திரு மீ. ப. சோமசுந்தரம் தலைமை தாங்கினார். விழா தொடக்க நாளில் தமிழிசைக் காவலர் டாக்டர் ராஜா சர் மு. அ. முத்தையா செட்டியார், தமிழக சட்டமன்ற பேரவைத் தலைவர் க. ராசாராம், மதுரை மாவட்ட ஆட்சித் தலைவர் திருமதி வி. சந்திரலேகா ஆகியோர் கலந்து சிறப்பித்தனர்.

தினசரி நடைபெற்ற கலை நிகழ்ச்சிகளில் திருவிழா ஜெயசங்கர் நாதசுரம், வலையப்பட்டி சுப்பிரமணியம் தவில், இஞ்சிக்குடி E. M. சுப்ரமணியன் சிறுவர்கள்-நாதசுரம், ஜெயந்தி சுராஜராஜனும், குமாரி B. சுவர்ணமுகி நாட்டிய நிகழ்ச்சிகளும், சீர்காழி கோவிந்தராஜன், மதுரை சோமசுந்தரம், மதுரை அபிராமி குழுவின் இன்னிசைக் கச்சேரிகளும், வரகூர் ஆ. க. முத்துக்குமாரசாமி திருவருட்பா பாடல் நிகழ்ச்சியும், ஓதுவார்கள் S நமச்சிவாயம், திருத்தணி ல. சுவாமிநாதன், திரு கடலூர் கு ரா. சிவப்பிரகாச தேசிகர், சமயபுரம் கவி சோ. கனக சபாபதி தேவாரா இன்னிசை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. சென்னை பிரியதர்சினி குழுவினர் நாடகங்களும் நடத்தினர்.

தினசரி ஏராள ரசிகர்கள் வந்து கலை நிகழ்ச்சிகளை ரசித்தனர்.

தமிழிசைக் காவலர்

## இராஜாசர் முத்தையா செட்டியார் மறைவு

### கலை உலகம் அஞ்சலி!



நாற்பது ஆண்டுகளுக்கு முன் சென்னையில் தமிழிசைச் சங்கம் நிறுவி தமிழிசை இயக்கத்தை தோற்றுவித்தவரும் பெரும் தொழில் அதிபரும், பல கல்வி அறநிறுவனங்களைத் தொடங்கியவரும் ஆன செட்டிநாடு இராஜா சர் முத்தையா செட்டியார் கடந்த 12-5-84 அன்று சென்னையில் தமது 79வது வயதில் காலமானார். அவருக்கு அரசியல் தலைவர்கள், அரசாங்க அலுவலர்கள் தொழிலதிபர்கள் இறுதி மரியாதை செலுத்தும் பொழுது ஏராள தமிழிசை வாணர்கள்-ஓதுவார்கள் வந்து கண்ணீர் சிந்தினர். அவர் தமிழிசைக்கு ஆற்றிய தொண்டினை நினைவுறுத்தினர்.

பல ஆண்டுகளாக அவர் நோய்வாய்ப்பட்டிருந்தாலும் ஆர்வமுடன் வந்து தமிழிசை விழாக்களில் கலந்து தமிழிசைக் கலைஞர்களை ஆதரிப்பதில் அவர் என்றும் ஆர்வமாக இருந்தார். சென்ற ஆண்டு சென்னை தமிழிசைச் சங்க ஆண்டு விழாவிலே உடல்நிலை மிகவும் பாதிக்கப்பட்டிருந்தும் பல நாட்களும் வந்து கலைஞர்களை பாராட்டினார்;

அவரது வாழ்க்கை வரலாற்றை இவ்விதழில் தனியே விவரமாகக் கொடுத்துள்ளோம். அவர் தொடங்கிய பணியை அவரது மகனார் மற்றும் மேலும் தமிழிசைத் தொண்டாற்ற வேண்டும் என 'இயலிசை' கேட்டுக் கொள்கின்றது. அதுவே அவருக்கு செலுத்தும் மிகப்பெரிய அஞ்சலியாகும்.

நாதசுரம்

## மதுரை MPN சகோதரர்கள் இல்லத் திருமணம்!

### கலைஞர்கள் கலை

தமிழக அரசவைக் கலைஞர்கள் மதுரை (MPN சேதுராமன்) அவர்கள் இளவல் MPN பொன்னுசாமி மகன் செல்வன் P. நடராசசுந்தரம் BSc க்கும் பெரியகுளம் மணி முதலியார் மகள் செல்வி M. பாண்டியலட்சுமி திருமணம் மதுரை முத்தையா திருமண மண்டபத்தில் 1-6-84 அன்று நடைபெறுகின்றது.

மதுரை சங்கீத ரத்ன விநாயகர் கோவிலிலிருந்து பெண் அழைப்பு நடைபெறுகிறது. அதற்கு திருக்கடையூர் T G. சுப்ரமணியம் கோட்டூர் சகோதரர்கள் நாதசுரம் வாசிக்கின்றனர். இரவு மண்டபத்தில் வழுவூர் R. சாமராஜ் மாணவி ஜெயந்தி இராசகோபால் பரத நாட்டியம் நடைபெறும். காலை மணவிழாவில் பத்மஸ்ரீ ராமகிருஷ்ணன் பேட்டை K. கிருஷ்ணன் குழுவினர் நாதசுர இன்னிசை வழங்குவர். நாதசுர நிகழ்ச்சிகளுக்கு அரித்துவாரமங்கலம் AK பழனிவேல், திருக்காளப்புத்தூர் TA கலியமூர்த்தி, திருச்சேறை TG முத்துகுமாரசாமி பிள்ளை, தஞ்சாவூர் TR கோவிந்தராஜன் வேதாரண்யம் G பால சுப்ரமணியம் மன்னார்குடி MR வாசுதேவன் திருப்புங்கூர் TG முத்து குமாரசாமி ஆகியோர் தனித்தவில்கள் வாசிப்பர்.

மாலை நடைபெறும் வரவேற்பிற்கு மதுரை தெற்கு காவல் துறையினர் இசை நிகழ்ச்சி நடைபெறும். மணமக்களுக்கு 'இயலிசை' யின் வாழ்த்துக்கள்!

## சப்தஸ்வரா மண்டபத்தில் ராமநவமி இசை விழா!

சென்னை மயிலையில் புதிதாக கட்டப்பட்ட சப்தஸ்வரா மண்டபத்தில் ஸ்ரீராமநவமி இசைவிழா 2?-5-84 முதல் 2-6-84 வரை நடைபெறுகின்றது. இவ்விழாவினை ஸ்ரீராம பக்த ஜனசபையார் ஏற்பாடு செய்துள்ளனர். தினசரி பிரபல கர்நாடக இசைவாணர்கள் தக்க துணைக் கருவியாளர்களுடன் இன்னிசை வழங்குகின்றனர். அனுமதி இலவசம்.

## கரூரில் கேட்ட கானம்

கடந்த 6-5-84 அன்று கரூர் நாரத கான சபை ஆதரவில் திருவெண்காடு ஜெயராமன் கச்சேரி செய்தார். கோவை பாலசுப்ரமணியன் பிடிலும் T. K. ராஜாமணி மிருதங்மும் வாசித்தனர். ஜெயராமன் அவர்கள் நல்லமுறையில் பாடி கூடியிருந்த தரமான ரசிகர்களை திருப்தி செய்தார். அவருக்கு துணையாக துணைக்கருவியாளர்களும் சிறப்பாக வாசித்து ரசிகர்கள் ஆதரவினைப் பெற்றனர்.

## கடிதங்கள்

ஆசிரியர் அவர்களுக்கு,

சித்திரை இதழில் விழுப்புரம் அருள்மிகு ஆஞ்சநேய சுவாமி பாமாலை மணம்கண்டு மயங்கினேன்.

புலவர் ச. சிவசுப்பிரமணியன்
ஈஸ்வேயார் பொறியியல்
தனி நிறுவனம், சென்னை-4

அன்புடையீர்,

இசைக்கலைக்கென்றே தாங்கள் கடந்த 2 ஆண்டுகளாக சிறந்த இதழை நடத்தி வருவது இதுகாறும் என் கவனத்திற்கு வாராமலிருந்து விட்டது குறித்து யான் மனம் மிக வருந்துகிறேன். ஏனெனில் இத்தகையதொரு இதழ் தமிழிலே வேறெதுவுமே கிடையாது. தங்கள் அரிய முயற்சிக்கு என்னுடைய நல் வாழ்த்துக்கள்!

இசையாராய்ச்சியாளர்
ப. தண்டபாணி B. E, M.Sc,
சென்னை-14.

அன்புள்ள ஆசிரியர் அவர்களுக்கு

தங்கள் 'இயலிசை, இதழில் தொடர்ந்து வெளிவரும் 'ஆடலரசி அபிராமி' கலைத் தொடர் கதை மிகவும் அரியதொரு படைப்பு என்றால் மிகையாகாது. நாட்டியத்திற்கும் இசைக்கும் முக்கியத்துவம் கொடுத்து ஒரு படமெடுக்க வேண்டும் என்ற ஆர்வம் நிறைந்த திரைப்படத் தயாரிப்பாளர் யாராவது ஒருவரது பார்வையில் பதிந்து சுவைமிக்கதொரு கலைக்காவியமாக இக்கதை திரைப்படமாக விரைவில் உருவாகும் என்று நம்புகிறேன். அந்த அளவுக்கு ஏராளமான கலை நுணுக்கங்களும் மிக அரிதான குறிப்புகளும் இதழ்தோறும் இடம் பெற்று வருவதால்தான், இவை படித்து இன்புறுவதுடன் மட்டுமல்லாமல், படமாகப் பார்த்தும் மகிழ வேண்டும். தில்லானா மோகனம்பாள், மிருதங்க சக்கரவர்த்தி போன்ற வெற்றிப் படங்களின் வரிசையில் அமைய வேண்டும் என்ற ஆவலில் இதை தெரிவிக்கிறேன். தயாரிப்பாளர்கள் முன்வர வேண்டுகிறேன்.

அன்புள்ள,
'பூங்கொடி' கோவை-2,

## எமனுக்கு வந்த விபரீத ஆசை!

சென்ற ஏப்ரல் 26ந் தேதி எமனுக்கு திடீரென்று ஒரு ஆசை வந்தது தனது தூதுவர்களை அழைத்து 'எனக்கு பழமையான சர்நாடக சங்கீதம் கேட்க வேண்டும். நல்ல சங்கீத வித்வானையும் பக்க மேளக்காரர்களையும் அழைத்து வா, என்று கட்டளையிட்டார். அவர்கள் உடனே கலை உலக கேந்திரமான சென்னைக்கு வந்தனர். வந்தவர்களுக்கு கொஞ்சம் இரக்க குணமும் உண்டு எமலோகம் அழைத்து வந்து யாரையும் திருப்பி அனுப்ப இயலாதே என எண்ணினர். சரி, நன்றாக பாடக்கூடிய - வாசிக்கக்கூடிய வயது முதிர்ந்த பழைய கலைஞர்களை அழைத்துச் சென்றால் சற்று நியாயமாக இருக்கும் என அன்றே-அதாவது ஒரே நாளில் இசைமேதை M. D. ராமநாதன் வயலின் மேதை B. K. விஸ்வநாத சர்மா மிருதங்க மேதை தஞ்சாவூர் கிருஷ்ணமூர்த்தி ராவ் இவர்களை பிடித்து சென்று விட்டார். எமனுக்கு வந்த விபரீத ஆசையால் இவர்களை இழந்து இசையுலகம் கலங்குகின்றது. அவர்களுக்கு இயலிசையின் அநுதாபங்கள்! கலைஞர்களுக்கு அஞ்சலி!

## மேல் மருவத்தூர் ஆதிபராசக்தி பாடல்கள் மதுரை ஆன்மிக மாநாட்டில் வெளியீடு

மேல்மருவத்தூர் தவத்திரு பங்காரு அடிகளார் தலைமையில் ஆன்மீக மாநாடு மே 12, 13 தேதிகளில் மதுரை மாநகரமே வியக்கும் வண்ணம் சிறப்பாக நடைபெற்றது. இம் மாநாட்டில் மேல் மருவத்தூர் அருள்மிகு ஆதி பராசக்தி அம்மன் மீது பாடிய இசைச்சுட்டிகளை Casettes மாவட்ட ஆட்சித் தலைவர் திருமதி வி.சந்திரலேகா வெளியிட்டார்.

கும்பகோணம் திருமதி சியாமளா சிவராமன் பாடிய இசைச் சுட்டியில் அம்மன் திருப்பள்ளி எழுச்சி, கவசம் முதலியன பதிவு செய்யப்பட்டிருந்தது. கவிஞர் சுப்பு ஆறுமுகம் வில்லுப் பாட்டு இசைச்சுட்டியில் திருக்கோவில் பெருமைகள் அடங்கியிருந்தன. அம்மன் பக்திப் பாடல்கள் இசைச் சுட்டியில் பாடல்களை S. ஜானகி சசிரேகா, சிதம்பரம் S. மீனாட்சி சுந்தரம், ஸ்ரீபதி, J ஹேமலதா ஆகியோர் பாடியிருந்தனர். இந்த இசைச் சுட்டிகளுக்கு R V குமார் இசையமைத்திருந்தார். மாநாட்டில் ஏராளமான இசைச் சுட்டிகள் விற்பனையாகியது.

## இராஜாசர் முத்தையா செட்டியார் வாழ்க்கைக் குறிப்பு

தமிழக அரசியலிலும், கலை, கல்வி, தொழில் துறைகளிலும் முக்கிய பங்கு வகித்து வந்த "செட்டி நாடு ராஜா" முத்தைய செட்டியார் 1905-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 5-ந் தேதி பிறந்தார்.

இவருடைய தந்தையார் அண்ணாமலை செட்டியார். (அண்ணாமலை பலகலைக் கழகத்தை நிறுவியவர்)

சென்னை வேப்பேரியில் தொடக்கக் கல்வி பயின்ற பின், திருச்சி செயின்ட் ஜோசப் உயர்நிலைப் பள்ளியில் படித்தார். பிறகு, சென்னையில் மாநிலக் கல்லூரியில் சேர்ந்து படித்து 'பி ஏ'' பட்டம் பெற்றார். மேல்நாட்டு அறிஞர்களிடம் ஆங்கிலம் படித்தார்.

கல்லூரிப் படிப்பை முடித்தபின் அவர் தந்தையாரின் தொழில் நிறுவனங்களில் பயிற்சி பெற்றார். பர்மாவிலும் மற்றும் கீழ்க்கரை நாடுகளிலும் 44 இடங்களில் இவருடைய குடும்பத்தின் தொழில் நிறுவனங்கள் இருந்தன அங்கு அடிக்கடி சென்று, தொழிலில் நேரடிப் பயிற்சி பெற்றார்.

பொது வாழ்க்கையில் ஈடுபட விரும்பிய முத்தைய செட்டியார், 1932-ல் சென்னை மாநகராட்சியின் முதல் மேயராக தேர்ந்து எடுக்கப்பட்டார்.

மீண்டும் 2-வது முறையாகவும் மேயராக தேர்ந்து எடுக்கப்பட்டு, 1936 வரை அப்பொறுப்பை வகித்தார்.

1936-ம் ஆண்டு, அப்போதைய சென்னை மாகாணத்தின் "ஜஸ்டிஸ் கட்சி" ஆட்சிப் பொறுப்பை ஏற்றபோது. கல்வி, சுகாதார, ஊராட்சி மந்திரியாக நியமிக்கப்பட்டார்.

1930 முதல் 37 வரை தமிழக மேல்-சபை உறுப்பினராக இருந்தார்.

1937 முதல் 1939 வரையும் பிறகு 1942 முதல் 1962 வரையும் தமிழ்நாடு சட்டசபை உறுப்பினராகவும், 1964 முதல் 1970 வரை மேல் சபை உறுப்பினராகவும் இருந்தார்.

செட்டி நாடு சிமெண்ட் நிறுவனத்தின் தலைவராகவும். "இந்தியன் இம்பீரியல் பாங்கி" இயக்குனராகவும், "இந்தியன் பாங்கி" இயக்குனராகவும் பல ஆண்டுகள் பதவி வகித்தார்.

சென்னை இயல்-இசை சங்கத் துணைத் தலைவராக இருந்தவர் மதுரை இயல் இசை சங்கத்தை தோற்றுவித்தார்.

"ராஜா முத்தைய செட்டியார்" கல்வி அறக்கட்டளையை நிறுவினார். இந்த அறக்கட்டளை 7 பள்ளிக் கூடங்களை நடத்துகிறது. அதில் 10 ஆயிரம் மாணவர்கள் படிக்கிறார்கள். 400 ஆசிரியர்கள் வேலை பார்க்கிறார்கள்.

இந்த அறக்கட்டளைக்கு ரூ. 30 லட்சம் நன்கொடை கொடுத்துள்ளார்.

சென்னை பல்கலைக் கழகத்தில் சைவசித்தாந்தத் துறை தொடங்க ரூ 4 லட்சம் நன்கொடை கொடுத்துள்ளார். மற்றும் தமிழ் சமஸ்கிருத மொழி ஆராய்ச்சிக்கும் நன்கொடை அளித்துள்ளார்.

தமிழ் இசைக்காக மிகவும் பாடுபட்டவர், முத்தைய செட்டியார்.

கச்சேரிகளில் தெலுங்கு பாடல்களே பாடப்பட்டு வந்த காலத்தில் "தமிழ்ப் பாடல் பாட வேண்டும்" என்று வலியுறுத்தி "தமிழ் இசை இயக்கம்" தொடங்கினார். அதில் வெற்றியும் பெற்றார்.

இலங்கை, மலேசியா, ஜெர்மனி ஜப்பான், இங்கிலாந்து, பிரான்ஸ் இத்தாலி முதலிய நாடுகளுக்கு சென்றிருக்கிறார். இவரை இங்கிலாந்து ராணி எலிசபெத் வரவேற்று விருந்து அளித்திருக்கிறார்.

அண்ணாமலை பல்கலைக் கழக இணை வேந்தராக இருந்து ஏராளமான பணிகள் செய்திருக்கிறார். தொழிற் கல்வியை கொண்டு வருவதற்கு பெருமுயற்சி எடுத்துக் கொண்டார். "ராஜா முத்தையா பல் வைத்தியக் கல்லூரி"யை தொடங்கினார்.

அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் மருத்துவக்கல்லூரி தொடங்க ஏற்பாடுகள் செய்து வந்தார். மருத்துவக் கல்லூரி அடுத்த ஆண்டு (1985) ஜூன் மாதம் தொடங்க திட்டமிடப்பட்டுள்ளது.

சென்னையில், தமது தந்தையார் அண்ணாமலை செட்டியார் பெயரால் "ராஜா அண்ணாமலை மன்றம்" நிறுவினார்.

1954-ம் ஆண்டில் சிதம்பரம் அண்ணாமலை பல்கலைக் கழக வெள்ளி விழாவில் இவருக்கு "டாக்டர்" பட்டம் வழங்கப்பட்டது.

முத்தைய செட்டியாரின் மனைவி பெயர் மெய்யம்மை ஆச்சி.

இவர் பெயரால் மெய்யம்மை உயர்நிலைப் பள்ளி, ராணி மெய்யம்மை ஆரம்பப்பள்ளி ஆகியவை நடந்து வருகின்றன.

முத்தைய செட்டியாரின் மூத்த மகன் எம். ஏ. எம். முத்தையா சில ஆண்டுகளுக்கு முன் காலமானார். இரண்டாவது மகன் எம். ஏ.எம். ராமசாமி, பிரபல தொழில் அதிபராக விளங்குகிறார்.

அறிஞர் அண்ணா பாராட்டியவர்

## திவ்ய பிரபந்தம் பாடும் பெரியவர்

காஞ்சிபுரம்- எம். என். வேங்கடவரதன்



தமிழிசை வளர்ச்சியில் வைணவ சமயத்திற்கும் பங்கு உண்டு. வைணவ சமய ஆழ்வார்கள் பாடிய நாலயிர திவ்ய பிரபந்த பாடல்கள் அனைத்தும் மக்களுக்கு புரியும்படி அழகிய தமிழ் வார்த்தைகளால் ஆனது. இசையோடு பாடப் பெற்றது. பிரபந்தம் பாடுவதில் வல்லவர்களாக பல இசைக் கலைஞர்கள் வாழ்ந்தனர். இன்று அம் மரபில் ஏராள பிரபந்தங்களைப்பாடி இசையோடு மாணவர்களுக்கு கற்று தந்து தமிழிசை. வைணவ தொண்டு புரிந்துவருபவர் இசைப்பெரியாக காஞ்சிபுரம் எம். என். வேங்கடவரதன் அவர்கள் அவரை இயலிசை ஆசிரியர் பேட்டி கண்டார்.

காஞ்சிபுரத்தில் வைணவ குடும்பத்தில் பிறந்த இவர் மறைந்த மாமேதை காஞ்சிபுரம் நயினாபிள்ளை. அவரது மகன் இரத்தினசாமி இவர்களிடம் குருகுலவாசம் செய்து முறையான இசை பயிலும் பேறு பெற்றார். 20 வயது முதல் திருவிழா, மணவிழா, வானொலி. சபை கச்சேரிகளை செய்து வருகின்றார். பிரபந்தப் பாடல்களில் ஆர்வம் கொண்டு ஏராள பாடல்களைப் பின்று மெட்டமைத்து இசை நிகழ்ச்சிகளில் பாடி வந்தார். அக்காலத்தில் திருப்பாணாழ்வார் செய்த வீதி வல பிரபந்த சேவை போல் இவரும் காஞ்சிபுரத்தில் பிரபந்தச் சேவை செய்தவர். தனி முழு நேர பிரபந்தக் கச்சேரிகளும் செய்து வருகின்றார்.

இவரது தமிழிசைச் சேவை கண்டு மறைந்த பேரறிஞர் அண்ணா அவர்களும் பாராட்டியுள்ளார்கள். அண்ணா அவர்களின் தாயார் பிரபந்த பாடல்களில் ஈடுபாடு உடையவர். அவரும் வேங்கட வரதனைப் பாராட்டி பல பிரபந்த பாடல் புத்தகங்களையே பரிசாக தந்தார். 1946ல் காஞ்சி சங்கராச்சாரியார் இவருக்கு 'திருப்பாவைச் செல்வன்' என்ற பட்டம் கொடுத்துள்ளார். 1957ல் திருவிடந்தையில் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரியார் இவருக்கு 'அருளிச் செயல் திலகம்' என்ற பட்டம் வழங்கினார்.

காஞ்சிபுரத்தில் இசையாசிரியராக வாழ்வினைத் தொடங்கிய இவர் சென்னை கலாக்ஷேத்ராவில் 3 வருடம் பணியாற்றி 1967 முதல் திருவல்லிக் கேணியில் உள்ள தெம்மேலி ஆளவந்தார் நாயகர் தரும பரிபாலன திவ்ய பிரபந்த பண்ணிசைப் பாடசாலையின் முதல்வராகப் பணியாற்றி வருகின்றார். வயது 65 ஆனாலும் கம்பீரமான சரீரமும் சாரீரமும் இன்றும் உடையவராய் இருக்கிறார்.

இசை உலகமும் வைணவ பெருமக்களும் மேலும் அவரை ஆதரித்து பிரபந்த இசையை வளர்க்க வேண்டும். தமிழிசையை ஆதரிக்க வேண்டும்.

---

### வெங்கட்ரமண பாகவதர் ஆராதனை இசைவிழா

திருவையாறு தியாகராச சுவாமிகளின் நேரடி சீடர் வெங்கடரமண பாகவதர்-தமிழகத்தைச் சார்ந்த சௌராஷ்டிர குடியில் வந்தவர். நிறைந்த குருபக்தி உடையவர். சுவாமிகளும் இவர்மீது மிகுந்த அன்பு வைத்திருந்தார்.

தியாகராச சுவாமிகள் இயற்றி பாடிய இசை நாடகங்களில் ஒன்று 'நௌகா சரித்திரம்' பூரண நிலவொளியில் கண்ணனுடன் உறவாடி மகிழ்ந்த கோபியர்களின் அகந்தையை அடக்கி ஆட்கொள்ளும் கருத்தமைந்த அருமையான நாடகம் இது. பாகவதத்தில் இதற்கு மூலமான ஆதாரக் கருத்துக்கள் இல்லை, சமஸ்கிருதத்திலும் மூல கிரந்தங்கள் இல்லை என இந்நாடகக் கருத்தையே அக்கால அந்தணர்களும், வித்வான்களும் எதிர்த்தனர். இதனைக் கேள்வியுற்ற வெங்கட்ரமணர் 'நௌகா சரித்திரத்திற்குமூலமான ஒரு வட மொழி கிரந்தம் இருக்கின்றது. மூன்றே நாட்களில் அதனைத் தேடிக் கண்டுபிடித்து சத்குருவின் மதிப்பினை உணர்த்துவேன் என்று அவர்களிடம் சபதம் செய்தார். ஏட்டுச்சுவடிகளில் வளமையான வடமொழியில் மூலக்கிரந்தம் என்று காட்சி அளிக்கும்படி தயாரித்து அனைவரையும் நம்பும்படி செய்து தம் குருவை அவமதித்தவர்களை வெட்கித் தலை குனியச் செய்தார்.

வெங்கட்ரமணரின் சமயோசித மதியினையும் குரு பக்தியையும் கொண்டாடிய தியாகப்பிரம்மம் தம்முடைய பூர்ண ஆசியை அவருக்கு வழங்கினார்.

அவரது 203-வது ஜெயந்தி விழா தமிழகத்தின் பல ஊர்களில் சில இடங்களில் எளிமையாகவும், சில இடங்களில் சிறப்பாகவும் கொண்டாடப்பட்டது. கும்பகோணத்தில் வெங்கட்ரமண பாகவத சுவாமிகள் அவையில் 11வது ஆண்டு விழா பிரமன் கோவில் சன்னதியில் 20-4-84 முதல் 3 நாட்கள் சிறப்பாக நடைபெற்றது. ஏரான நாதசுர, இசைக்கலைஞர்கள் கலந்து வெங்கட்ரமணர், தியாகராசர் கீர்த்தனங்களைப் பாடினர். விழா ஏற்பாடுகளை குடந்தை P. B. நன்னப்பையர் செய்திருந்தார்.

## ஆட்சி செய்யும் மீனாட்சி

—இராம ராகவேந்திரன்







(பல்லவி)

அருளாட்சி கூட்டுகின்ற அரசாட்சி — என்
அன்னையயற் கண்ணியவள் பேராட்சி! (அருளாட்சி)

(அநுபல்லவி)

கருணை மழை பொழிந்துதவும் கண்ணாட்சி - நீ
காணும்திசை யெல்லாமே பொன்னாட்சி!! (அருளாட்சி)

(சரணங்கள்)

1) ஆடலழகன் அங்கம் நிறை மீனாட்சி - வரும்
அடியவரின துயர் களையும் சீதனாட்சி!
பாடலழகன் சம்பந்தன் நாவாட்சி - செய்த
பைரவியே உன்பாதம் பூவாட்சி!! (அருளாட்சி)

2) மாசக்தி உன்விரலில் கிளியாட்சி - காணும்
மதுரையது எழில்கொஞ்சும் கலையாட்சி
நீ சக்தி நினைச்சுற்றி என்னாட்சி - என்றும்
நீண்டுவரச் செய்வாயே பண்ணாட்சி!? (அருளாட்சி)

